### பேய்ப்பீர்க்கின் பெயர்.

காரகரீ தேவ தாளீ கருதிய தேவ தாடம்
விராவுறு வேணீ யோடு விருத்தகோ சமுமப் போராம்
ஆராலாகு விஷஹா மற்றைத் துன்னுஜீ மூதக ந்தான் [ர்.
பாராவுறு பேய்ப்பீர்க் கென்றே பன்னுவர் மருத்தி னூலோ

(இ—ள்.) காரகரீ, தேவதாளீ, தேவதாட:, வேணீ, வ்ருத்தகோச:, ஆகுவிஷஹா, ஜீமூதக: இவை பேய்ப்பீர்க்கின் பெயர்கள். (95)

### முள்வெள்ளரியின் பெயர்.

திரபுஸம் கடுகம் திக்தம் விபாண்டுவே தீர்க்க பர்ணீ
மருவுமூத் திரப லாவே மகிழஸ்தி பர்ணி னீயாம்
திரிவில்கர் கடிகா வோடு சேர்லதா வென்னும் பேரும் [ர்.
பெருகுமுள் வெள்ள ரிக்கே பேரெனச் சொல்வர் மேலோ

(இ—ள்.) த்ரபுஸம், கடுகம், திக்தம், விபாண்டு:, தீர்க்கபர்ணீ, மூத்ரபலா, ஹஸ்திபர்ணிநீ, கர்கடிகாலதா, இவை முள்வெள்ளரியின் பெயர்கள். (96)

### வெள்ளரியின் பெயர்.

அசைதந்த பலாவே ஸ்தூலா வணிதோய பலாவே யாகும்
நசையுறு லோம சாவும் நவில்முனி யூரு வாரு
வசையுறும் வ்யாள பத்ரா வனமுறு கர்க்க டீயும்
இசையுறும் வெள்ள ரிக்கே யியம்பிய நாம மாமே.

(இ—ள்.) தந்தபலா, ஸ்தூலா, தோயபலா, லோமசா, உர்வாரு:, வ்யாளபத்ரா, கர்கடீ இவை வெள்ளரியின் பெயர்கள். (97)

### வெள்ளரிப்பழத்தின் பெயர்.

காண்டகம் வாலு ஸ்நிக்த பலாவோடு கருது மப்போ்
நீண்டநல் மதுரஞ் சேர்ந்த பலாவென நிகழும் பேரும்
மூண்டநீர் வாலு கம்மே மொழியுமிந் நாமம் யாவும் [ம்.
வேண்டிடு முலகோர் போற்றும் வெள்ளரிப் பழமே யாகு

(இ—ள்.) காண்டகம், வாலு, ஸ்நிக்தபலா, மதுரபலா, வாலுகம் இவை வெள்ளரிப்பழத்தின் பெயர்கள். (98)

### கக்கரியின் பெயர்.

கடுதலா பீத ஸாவே கர்கடீ த்ரபுஸீ யென்ப
அடுதலா மஸ்தி பர்ணீ யணிசர்த்தா சனிகா வாகும்
நெடுலோம சகண்டா வோடு நிரம்புமூத் ரபலாப் பேரும்
விடுகிலாக் கக்க ரிக்கே விளங்கிடும் பெயர்க ளாமே.

(இ—ள்.) கடுதலா, பீதஸா, கர்கடீ, த்ரபுஸீ, ஹஸ்தி பர்ணீ, சர்த்தாசநிகா, லோமசகண்டா, மூத்ரபலா இவை கக்கரியின் பெயர்கள். (99)

### பூசனிக்காயின் பெயர்.

கொழுங்கும்ப பலாவி னோடு கூஷ்மாண்டீ ஸோம ஸ்ருஷ்டா
எழுதரும் ப்ருஹத்ப லாவே யெழிலுறும் ஸ்திரபலாவும்
பழுதில்கூஷ் மாண்டி காவும் படருறும் பீதி காவும்
விழைவுறும் பூச னிக்காய் விளம்புநற் பெயரா கும்மே.

(இ—ள்.) கும்பபலா, கூஷ்மாண்டீ, ஸோமஸ்ருஷ்டா, ப்ருஹத்பலா, ஸ்திரபலா, கூஷ்மாண்டிகா, பீதிகா இவை பூசனிக்காயின் பெயர்கள். (100)

**தற்பூசிப்பழத்தின் பெயர்.**

கலிங்கஞ்சித் திரவல் லீகம் கழறிடும் மாம்ஸ லந்தான்
இலங்குமாம் ஸபலத் தோடே யிருமது ரபல மாகும் [றும்
சலங்கொள்த்ருஷ் ணுப லம்வ்ருத் தபலஞ்சித் ரபல மென்
நலங்கிளர் சித்ர மென்றும் நாட்டுவர் தற்பூ சிக்கே.

(இ—ள்.) கலிங்க:, சித்ரவல்லீக:, மாம்ஸல:, மாம்ஸ பல: மதுரபல:, த்ருஷ்ணுபல:, வ்ருத்தபல:, சித்ரபல:, சித்ர: இவை தற்பூசியின் பெயர்கள். (101)

**பீர்க்கின் பெயர்.**

வேறு

தாமார்க்க வத்தோடு ராஜ கோசா
  தகிகர்க்கோ டகிபீத புஷ்பா தானும்
தேமார்ந்த மஹாஜாலீ ஹஸ்தி கோஷா
  திகழ்கோச பலாதன்யா மஹாப லாவும்
வாமார்ந்த மஹாகோசா தகியே யென்று
  வழுத்தியவிந் நாமமெலாம் வயங்கு நூலோர்
தீமார்க்கங் காட்டுகின்ற சீதஞ் சேருஞ்
  செறிபீர்க்கின் பெயரென்றே செப்பி னரால்.

(இ—ள்.) தாமார்கவ:, ராஜகோசாதகீ, கர்க்கோடகீ, பீதபுஷ்பா, மஹாஜாலீ, ஹஸ்திகோஷா, கோசபலா, தந்யா, மஹாபலா, மஹாகோசாதகீ இவை பீர்க்கின் பெயர்கள். (102)

**சிறு பீர்க்கின் பெயர்.**

ஜாலினீ க்ஷ்வேடா கோசா தகீக்ருதச் சித்ரா தானுங்
கோலமார் கண்டா லீயே கொண்ம்ருதங் கபலி காவும்

ஏலுறும் ஸாதிக்தா வோடு மியல்க்ருத வேத னீயும்
பாலுறுஞ் சிறுபீர்க் கென்றே பன்னுவர் பாரி லுள்ளோர்.

(இ—ள்.) ஜாலிநீ, க்ஷ்வேடா, கோசாதகீ, க்ருதச் சித்ரா, கண்டாலீ, ம்ருதங்கபலிகா, ஸாதிக்தா, க்ருதவேத நீ இவை சிறு பீர்க்கின் பெயர்கள். (103)

### * காட்டு அகத்தியின் பெயர்.

சந்த்ரகங் குசலீ யாம்ல பத்ரக மென்றே சாற்றும்
முந்துவா லுகாபர் ணம்மே முற்றிடு ச்லக்ஷ்ணத் வக்கும்
நந்துறும் யமள பத்ர கத்தொடச் மந்த கந்தான்
சந்தமார் காட்ட கத்திப் பெயரெனச் சாற்று வாரே.

(இ—ள்.) சந்த்ரக, குசலீ, ஆம்லபத்ரக:, வாலுகா பர்ண:, ச்லக்ஷ்ணத்வக், யமளபத்ரக:, அச்மந்தக: இவை காட்டகத்தியின் பெயர்கள். (104)

### மந்தாரையின் பெயர்.

தாமிர புஷ்பத் தோடு சமரிகங் கோவி தாரம்
தேமுறு காஞ்ச னாரம் தெரிகுலீ குண்ட லீயும்
பூமஹா யமள பத்ரங் குத்தால கமுமே போற்றும்
காமுறு மந்தா ரைக்கே கழறுவர் கற்று வல்லோர்.

(இ—ள்.) தாம்ரபுஷ்ப:, சமரிக:, கோவிதார:, காஞ்சநார:, குலீ, குண்டலீ, மஹாயமளபத்ர:, குத்தாலக: இவை மந்தாரையின் பெயர்கள். (105)

### வலம்புரியின் பெயர்.

ஓதுமா வர்த்த கியே யுயர்மஹா ஜாலீ யோடு
நீதிசேர் சர்ம ரங்கா நிகழ்ந்திந்து கினியே யாகும்

* இதனைச் சீமையகத்தியெனக் கூறுவர்.

தீதறு விபாண்டீ பீத நீலகா பீத புஷ்பா
கோதறு மிப்பேர் யாவும் குறித்திடும் வலம்பு ரிப்பேர்.

(இ—ள்.) ஆவர்த்தகீ, மஹாஜாலீ, சர்மரங்கா, திந்து கிநீ, விபாண்டீ, பீதநீலகா, பீதபுஷ்பா இவை வலம்புரி யின் பெயர்கள். (106)

**சணலின் பெயர்.**

சணபுஷ்பீ மால்ய புஷ்பீ சணகண்டி காவே சாற்றும்
குணமுறும் வமனீ யோடு கொழுங்கடு திக்த கர்வும்
மணமுறும் பிருஹத் புஷ்பீ மஹாசணம் என்ற பேரும்
உணர்வுறு மேலோர் கூறும் உயர்சணல் நாம மாமே.

(இ—ள்.) சணபுஷ்பீ, மால்யபுஷ்பீ, சணகண்டிகா, வமநீ, கடுதிக்தகா, ப்ருஹத்புஷ்பீ, மஹாசண: இவை சணலின் பெயர்கள். (107)

**கோவையின் பெயர்.**

துண்டிகா பீலு பர்ணீ துண்டிகே ரபலா வாகும்
மண்டிய துண்டீ கோஹ்வா மணிரக்தபலாவே பிம்பீ
பண்டரு மொழியா ரோஷ்டோ பமபலா வென்னும் பேரும்
எண்டருங் கோவைக் கேதா னியம்பிடும் நாம மாமே.

(இ—ள்.) துண்டிகா, பீலுபர்ணீ, துண்டிகேரபலா, துண்டீ, கோஹ்வா, ரக்தபலா, பிம்பீ, ஓஷ்டோபமபலா, இவை கோவையின் பெயர்கள். (108)

**கடுக்காயின் பெயர்.**

சேதகீ விஜயா பத்யா சிவாபயா ஹரீத கீயும்
பேதமார் ப்ராண தாநந் தினீயொடு ப்பயத்தி யாவும்

பூதனு லவண வர்ஜீ புகன்றிடு மவ்ய தாவே
மேதகு ரேச கீஹை மவதியே ச்ரேய ஸீயும்.

(இ—ள்.) சேதகீ, விஜயா, சிவா, அபயா, ஹரீதகீ, ப்ராணதா, நந்தினீ, ப்ரபத்யா, பூதநா, லவணவர்ஜீ, அவ்யதா, ரேசகீ, ஹைமவதீ, ச்ரேயஸீ; (109)

வனதுர்க்கி காயஸ் தாவே வயங்குஜீ வந்தி தானும்
துனியறும் வயஸ்தா வோடு சொல்ஜயா பாஞ்சா லீயும்
பனியுறும் ரோஹி ணீயே பகரமிர் தாவு மென்ப
நனியுணர் புலவர் யாரும் நவின்றிடுங் கடுக்காய்ப் பேரே.

(இ—ள்.) வநதுர்க்கீ, காயஸ்தா, ஜீவந்தீ, வயஸ்தா, ஜயா, பாஞ்சாலீ, ரோஹிணீ, அமிர்தா இவை கடுக்காயின் பெயர்கள். (110)

### தான்றிக்காயின் பெயர்.

வாசந்தம் கல்கம் பூத வாசங்கர் ஷபல மக்ஷம்
பேசனி லக்னந் தைல பலந்துஷம் பஹேட கந்தான்
வீசுஸம் வர்த்த கம்வி பீதகம் விஷக்ன மென்ப
தேசுஹார் யங்க லித்ரு மம்பஹு வீர்யந் தான்றி.

(இ—ள்.) வாஸந்த:, கல்க:, பூதவாஸ:, கர்ஷபல:, அக்ஷ:, அநிலக்ந:, தைலபல:, துஷ:, பஹேடக:, ஸம்வர்த்தக:, வீபீதக:, விஷக்ந:, ஹார்ய:, கலித்ரும:, பஹுவீர்ய: இவை தான்றிக்காயின் பெயர்கள். (111)

### நெல்லிக்காயின் பெயர்.

பஞ்சசா ஸாவ யஸ்தா பகர்ஜாதீ பலர ஸந்தான்
அஞ்சிடாக் காயல் காவே துன்னமிர் தபல மென்ப

தஞ்சுறு சிவமே வ்ருக்ஷயம் தழுவுதாத் ரீப லப்பேர்
எஞ்சுமா மலகம் நெல்லி யியம்புஸ்ரீ பலமு மப்பேர்.

(இ—ள்.) பஞ்சரஸா, வயஸ்தா, ஜாதீபலரஸ:, காயஸ்தா, அம்ருதபல:, சிவ:, வ்ருக்ஷ்யபல:, தாத்ரீபல:, ஆமலக:, ஸ்ரீபல: இவை நெல்லிக்காயின் பெயர்கள் (112)

### சரக்கொன்றையின் பெயர்.

ரேசனம் வியாதி ஹாவா ரேவதங் கர்ணி காரம்
வாசமா ரக்வ தம்மே வருதீர்க்க பல மேயாகும்
பேசிடுங் கர்ணீ யோடு பெருஞ்சது ரங்கு லந்தான்
ஏசறு சரக்கொன் றைக்கே யியம்பிடும் பெயர்க ளாமே.

(இ—ள்.) ரேசந:, வ்யாதிஹா, ஆரேவத:, கர்ணிகார:, ஆரக்வத:, தீர்க்கபல:, கர்ணீ, சதுரங்குல: இவை சரக் கொன்றையின் பெயர்கள். (113)

### கொன்றையின் பெயர்.

கிருதமா லகம்சம் யாகம் கிளத்துநல் வ்யாதி காதம்
கருதுமா ரோக்ய சிம்பீ கர்ணிகா ரமுமே யாகும்
பெருகுவ்யாத் யந்த கந்தான் ப்ரக்ரஹ மென்றுங் கூறும்
விரவுறு ராஜ விருக்ஷம் விளம்பிடுங் கொன்றை யின்பேர்.

(இ—ள்.) க்ருதமாலக:, சம்யாக:, வ்யாதிகாத:, ஆரோக்யசிம்பீ, கர்ணிகார:, வ்யாத்யந்தக:, ப்ரக்ரஹ:, ராஜ வ்ருக்ஷ: இவை கொன்றையின் பெயர்கள். (114)

### தந்தியின் பெயர்.

தந்திசீக் ராதி கும்பா தருபுப சித்ரா வோடு
முந்திய குணப்ரி யாவு மொழிமகூ லகமுந் தானும்

பிந்திய விசல்லி யாவும் பேருதும் பரபர் ணீயும்
சந்தமார் நூலோர் போற்றுந் தந்தியின் பெயரா மென்ப.

(இ—ள்.) தந்தீ, சீக்ரா, நிகும்பா, உபசித்ரா, குணப்ரியா, மகூலகை:, விசல்யா, உதும்பரபர்ணீ இவைதந்தியின் பெயர்கள். (115)

### அரணியின் பெயர்.

அரணியே வராங்கி யோடு மரியவா வர்த்த கீயும்
புரணிசேர் ஜயாவ ஹாவும் புரிவிஷ பத்ர காவும்
சரணமே சேருஞ் கேச ருஹாவோடு சாரு மிப்பேர்
தரணியோர் மகிழ்ந்து போற்றும் தக்கநல் லரணி நாமம்.

(இ—ள்.) அரணீ,வராங்கீ,ஆவர்த்தகீ,ஜயாவஹா,விஷபத்ரகா, கேசருஹா இவை அரணியின் பெயர்கள். (116)

### நேர்வாளத்தின் பெயர்.

சாரகந் தந்தி பீஜம் தகுமலத் ராவி யோடு
நேரிய கும்பி பீஜம் நிகுமபாப் ஜநிகும் பம்பின்
பேர் கும்பி னீப லம்தித் ரீபலம் ரேச கந்தான்
சீர்ஜய பாலம் பீஜ ரேசகம் திகழ்நேர் வாளம்.

(இ—ள்.) ஸாரக:, தந்திபீஜம்,மலத்ராவி,கும்பீபீஜம், நிகும்பாபீஜம், நிகும்ப:, கும்பிநீபல:, தித்திரீபல:, ரேசக:, ஜயபால:,பீஜரேசக: இவை நேர்வாளத்தின் பெயர்கள். 117

### எலிக்காதிலையின் பெயர்

திரவந்தீ சம்ப ரீசண் டாசித்ரா நியக்கு ரோதா
பரவிய ப்ரத்யக் ஸ்ரேணி பகர்விஷா புத்ரஸ் ரேணீ
காவுமூ ஷிகர் ஹ்வ யாவும் கருதுமா குபர்ணி காவும்
விரவெலிக் காதின் பத்ரம் விளம்பிய நாம மாமே.

(இ—ள்.) த்ரவந்தீ, சம்பரீ, சண்டா, சித்ரா, ந்யக்ரோதா, ப்ரத்யக்ச்ரேணீ, விஷா, புத்ரச்ரேணீ, மூஷிகாஹ்வயா, ஆகுபர்ணிகா இவைஎலிக்காதிலையின் பெயர்கள். (118)

## அவிரியின் பெயர்.

நீலினீ நீலி காவே நிகழ்காலா விசோத னீயும்
ஏலுறு தூணீ மோசா யிகழ்விலாப் பார வாஹீ
வாலிய ரஞ்ச னீயும் வருஜயா வஹாவே ராஜ்ஞீ
கோலிய கீர்த்தி னீயே குலவுநல் விஜயா வென்ப.

(இ—ள்.) நீலினீ, நீலிகா, காலா, விசோதநீ, தூணீ, மோசா. பாரவாஹீ, ரஞ்ஜநீ, ஜயாவஹா, ராஜ்ஞீ, கீர்த்தநீ, விஜயா; (119)

அக்ரபத் ரகமே துத்தா யணிகேச ருஹமு மேற்கும்
முக்கிய க்ராம்யா வோடு முரணறு சகதே வந்தான்
தக்குறு முபபூ தம்மே தயங்குஶ்ரீ பலிகா வோடு
மிக்குறு மிப்பேர் யாவும் விளங்கிய வவிரி யின்பேர்.

(இ—ள்.) அக்ரபத்ரக:, துத்தா, கேசருஹ:,க்ராம்யா, ஸஹதேவ:, உபபூத:, ஶ்ரீபலிகா இவை அவிரியின் பெயர்கள். (120)

## மஹா நீலியின் பெயர்.

அமலாஶ்ரீ பலிகா துத்தா வருமஹா நீலி யோடு
நிமலமார் மேலா ராஜ நீலிகா வென்றே நாட்டும்
விமலமார் கேசார் ஹாவும் வியன்ப்ருச பத்திரி காவும்
சமமறு மஹாநீ லிக்கே சாற்றிடும் பெயர்க ளாமே.

(இ—ள்.) அமலா, ஸ்ரீபலிகா, ஹுத்தா, மஹாநீலீ, மேலா, ராஜநீலிகா, கேசார்ஹா, ப்ருசபத்ரிகா இவைமஹா நீலியின் பெயர்கள். (121)

### சதுரக்கள்ளியின் பெயர்.

கண்டீரம் ஸ்நுஹியே வஜ்ர கண்டகம் ஸீஹுண் டந்தான்
மண்டுநிஸ் த்ரிம்ச பத்ர கத்தோடு மஹாவி ருக்ஷம்
சண்டமார் குடாவே ஸ்நுக்கே சமந்ததுக் தாவு மாகும்
எண்டரு மிவைக ளெல்லா மியம்பிடுஞ் சதுரக் கள்ளி.

(இ—ள்.) கண்டீர:, ஸ்நுஹீ, வஜ்ரகண்டக:, ஸீஹுண்ட:, நிஸ்த்ரிம்சபத்ரக:, மஹாவ்ருக்ஷ:, குடா, ஸ்நுக், ஸமந்ததுக்தா இவை சதுரக்கள்ளியின் பெயர்கள். (122)

### பிரமிப்பூண்டின் பெயர்.

சாதலா விமலா ஸாரீ ஸப்தலா மராலி காவே
தீதறு விதுலா தீப்தா திகழ்சர்ம கஷாவி னோடும்
ஓதிய பகுபே னாவும் உயர்ந்திடு மமலா பேனா
மேதகு பிரமிப் பூண்டின் மிகுபெய ரென்ப மேலோர்.

(இ—ள்.) ஸாதலா, விமலா, ஸாரீ, ஸப்தலா மராலிகா, விதுலா தீப்தா, சர்மகஷா, பகுபேநா, அமலா, பேநா இவை பிரமிப்பூண்டின் பெயர்கள். இதனைப் பிரமிய வழுக்கை என்பர். (123)

### க்ஷீரணீயின் பெயர்.

காஞ்சன க்ஷீரி யோடு கடுபர்ணீ கர்ஷி ணீயும்
வாஞ்சையில் திக்த துக்தா வருஹியா வதியு மாகும்
பூஞ்சினை ஹேம துக்தா புகல்ஹைம வதியுங் கானில்
தீஞ்சிடு க்ஷீர ணீயே யென்றனர் தெரிந்த நூலோர்.

(இ—ள்.) காஞ்சநக்ஷீரீ, கடுபர்ணீ, கர்ஷிணீ, இக்ஷுதுக்தா, ஹிமாவதீ, ஹேமதுக்தா, ஹைமவதீ, க்ஷீரணீ இவை க்ஷீரணீயின் பெயர்கள். (124)

ஸர்வக்ஷீரீயின் பெயர்.

சுவர்ணதுக் தாவி னோடு சுவர்ணக்ஷீ ரிகாவே மற்றைக்
கவர்வுறு ஹேம க்ஷீரி கனகக்ஷீ ரியுமே யாகும்
தவறிலே மாஹ்வா ஸர்வ க்ஷீரியு மப்பே ராகும்
உவருறு காஞ்ச னீயும் உறுஸர்வ க்ஷீரி யின்பேர்.

(இ—ள்) ஸ்வர்ணதுக்தா, ஸ்வர்ணக்ஷீரிகா, ஹேமக்ஷீரீ, கநகக்ஷீரீ, ஹேமாஹ்வா, ஸர்வக்ஷீரீ, காஞ்சநீ இவை ஸர்வக்ஷீரியின் பெயர்கள். (125)

சிவதையின் பெயர்.

திரிவிருத் ச்யாமா காலா திகழுங்கா ளிந்தீ யோடு
மருவிய கால மேஷீ மகிழ்சுஷே ணீயு மாகும்
பெரியமா லவிகா வர்த்த சந்திரா வென்ற பேரும்
தெரிமசூ ரவித லாவும் சிறந்தநற் சிவதை யின்பேர்.

(இ—ள்.) த்ரிவ்ருத், ச்யாமா, காலா, காளிந்தீ, காலமேஷீ, ஸுஷேணீ, மாலவிகா, அர்த்தசந்த்ரா, மஸூரவிதலா இவை சிவதையின் பெயர்கள். (126)

வெண்சிவதையின் பெயர்.

திரிபண்டீ ஸரலா வோடு திரிவிருத் சுக்ர பாண்டீ
பொருவில்சர் வானு பூதி புகழ்திரி புடாவே யென்ப
தெரிகுமு தகந்தி னீயே திரயஸ்ரா வென்னும் பேரும்
கரியகா காக்ஷி யோடு கழறும்வெண் சிவதைப் பேராம்.

(இ—ள்.) த்ரிபண்டீ, ஸரலா, த்ரிவ்ருத், சுக்ர பாண்டீ, ஸர்வாநுபூதி:, த்ரிபுடா, குமுதகந்திநீ, த்ரயஸ்ரா, காகாக்ஷீ இவை வெண்சிவதையின் பெயர்கள். (127)

### பேய்த்தும்மட்டியின் பெயர்.

இந்திர வாருணீயே யிந்த்ராஹ்வா வைந்திரீயும்
இந்திர வாருவோடு மெழில்மிரு காதனீயும்
சந்தமில் கவாதனீக்ஷுத் ரபலாவே வ்ருஷபாக்ஷிப்பேர்
வந்திடுங் கவாக்ஷி போநீ வளர்பேய்த்தும் மட்டியின்பேர்.

(இ—ள்.) இந்த்ரவாருணீ, இந்த்ராஹ்வா, ஐந்த்ரீ, இந்த்ரவாரு:, ம்ருகாதநீ, கவாதநீ, க்ஷுத்ரபலா, வ்ருஷபாக்ஷீ, கவாக்ஷீ இவை பேய்த்தும்மட்டியின் பெயர்கள். (128)

### வரித்தும்மட்டியின் பெயர்.

பெருகிய வாத்மரக்ஷா பேசிடுந் த்ரபுஸீயோடு
வருமஹா பலாவு மற்றை வளர்சித்ர பலாவு மாகும்
உருவளர் த்ரபுஸா தானும் உயருநல் விசாலா வின்ன
கருதிடு நூலோர் கூறும் கமழ்வரித் தும்மட் டிப்பேர்.

(இ—ள்.) ஆத்மரக்ஷா, த்ரபுஸீ, மஹாபலா, சித்ரபலா, த்ரபுஸா, விசாலா இவை வரித்தும்மட்டியின் பெயர்கள். இதனை ஆற்றுத் தும்மட்டி எனவும் கூறுவர். (129)

### பம்பந்திராயின் பெயர்.

பல்மேதவா கிரிஜாவோடு பலபத்ரா க்ருதத்தி ராணை
உலவிய த்ராய மாணை வுயர்த்ராய மாணை காவும்
குலவுவார் வுிகீத்ரா யந்தீ கூறிடு மனுஜாவோடு
நிலவுமிந் நாமம் யாவும் நிகழ்பம் பந்திரா யின்பேரே.

(இ—ள்.) பலதேவர், கிரிஜா, பலபத்ரர், க்ருதத்ராணு, த்ராயமாணு, த்ராயமாணகா, வார்ஷிகீ, த்ராயந்தீ, அநுஜர் இவை பம்பந்திராயின் பெயர்கள். (130)

## சங்கங்குப்பியின் பெயர்.

சங்கினீ விஸர்ப்பி ணீயும் தளிருறும் யவதிக் தாவும்
பொங்கிய த்ருடபா தாவும் பொருவிலா யசஸ்க ரீயும்
கொங்குறு மக்ஷ பீடா குலவுறும் நேத்ர மீலா
இங்கிவை நர்கு லீயு மெழிற்சங்கங் குப்பி யின்பேர்.

(இ—ள்.) சங்கினீ, விஸர்ப்பிணீ, யவதிக்தா, த்ருடபாதா, யசஸ்கரீ, அக்ஷபீடா, நேத்ரமீலா, நாகுலீ இவை சங்கங்குப்பியின் பெயர்கள். (131)

## அழிஞ்சிலின் பெயர்.

அங்கோடம் ரேசி தீர்க்க கீலக மணிநிர் திஷ்டம்
மங்காத பீத ஸார மருவிய கந்த புஷ்பம்
கொங்கார்தாம் ரபலத் தோடு குறுகிய நிகோச கம்மும்
அங்கோல கத்தி னோடு மறைந்திடு மழிஞ்சி லின்பேர்.

(இ—ள்.) அங்கோட:, ரேசீ, தீர்க்ககீலக:, நிர்திஷ்ட:, பீதஸார:, கந்தபுஷ்ப:, தாம்ரபல:, நிகோசக:, அங்கோலக: இவை அழிஞ்சிலின் பெயர்கள். (132)

## நாயுருவியின் பெயர்.

கண்டியே சிகரி யோடு காமச்ச ரீயு மற்றை
அண்டிய ப்ரத்யக் புஷ்பீ யபாமார்க்கந் தானு மாகும்
எண்தரு பராக்புஷ் பீயே யெழிலுறு மர்க்க டீயும்
கொண்டிடும் கிணிஹி யோடு குலவிய வசிரம் பின்னும்.

(இ—ள்.) கண்டீ, சிகரீ, காமஞ்சரீ, ப்ரத்யக்புஷ்பீ, அபாமார்க:, பராக்புஷ்பீ, மர்க்கடீ, கிணிஹீ, வசிர:; (133)

மர்க்கட பிப்ப லீயும் மயூரகம் என்னும் பேரும்
தக்கநல் லதச்சல் யம்மே தழுவுதுர் கிரஹமும் போற்றும்
புக்கசை கரிகப் பேரும் புகழ்துர பிக்கிர ஹந்தான்
மிக்கவர் மகிழ்ந்து கூறும் விளங்குநா யுருவி யின்பேர்.

(இ—ள்.) மர்க்கடபிப்பலீ, மயூரக:, அத:சல்ய:, துர்க்ரஹ:, சைகரிக:, துரபிக்ரஹ: இவை நாயுருவியின் பெயர்கள். (134)

சேந்நாயுருவியின் பெயர்.

க்ஷுத்ராபா மார்க்க மோடு சூழ்ரக்தா பாமார்க் கம்மும்
ஒத்திடும் ரக்த புஷ்பம் உயர்கபி ப்பிப்ப லீயும்
வித்திடு வசிர மோடும் விளங்குமிந் நாமம் யாவும்
கத்துசெந் நாயு *ருவி கழறிடு மென்ப மேலோர்.

(இ—ள்.) க்ஷுத்ர அபாமார்க்க:, ரக்த அபாமார்க்க:, ரக்தபுஷ்ப:, கபிப்பலீ, வசிர: இவை செந்நாயுருவியின் பெயர்கள். (135)

வாலுளுவையின் பெயர்.

†தேஜஸ்வி தேஜ னீயே திகழ்தேஜாஹ்வ வாவே வீதா
நேசமார் வல்க லாவும் நிகழுச்வக் கினியு மென்ப
பேசுறு மஹேளஜ லீயும் பிறங்குதே ஜவதி தானும்
வாசமார் பாரி ஜாதா வயங்குவா லுளுவை யின்பேர்.

---

*நாயுருவி—நீட்டல்.

†இது கடைக்குறை.

(இ—ள்.) தேஜஸ்வினீ, தேஜநீ, தேஜாஹ்வா, வீதா, வல்கலா, அச்வக்நீ, மஹௌஜஸீ, தேஜவதீ, பாரிஜாதா இவை வாலுளுவையின் பெயர்கள். (136)

## சிறுவாலுளுவையின் பெயர்.

பெருகுஜோ திஷ்ம தீயும் பிறங்குநல் லவணு மற்றைக்
கருதுஜோ திஷ்கா யாவும் கழறிடு மக்னி பாலா
பொருவில்தூர் ஜாரக வர்ண லதிகாவும் கடபீ தானும்
தெரிதரு சிறுவா லோடு திகழ்ந்திடு முளுவை யின்பேர்.

(இ—ள்.) ஜோதிஷ்மதீ, லவணு, ஜோதிஷ்காயா, அக்நிபாலா, தூர்ஜரா, ஸுவர்ணலதிகா, கடபீ இவை சிறுவாலுளுவையின் பெயர்கள். (137)

## சிற்றரத்தையின் பெயர்.

புத்திர லாவே ரஸ்யா புகல்ரலா ராஸ்நா தானும்
நத்தமில் ச்ரேயஸீ யும் நவின்றி டுமதி ரலாவும்
சுத்தமாம் ரஸநா வோடு சுகந்தமூ லாவு மப்பேர்
உத்தமச் சிற்ற ரத்தை யுபர்யுக்த ரலாவு மென்ப.

(இ—ள்.) புத்திரலா, ரஸ்யா, ரலா, ராஸ்நா, ச்ரேயஸீ, அதிரலா, ரஸநா, ஸுகந்தமூலா, யுக்தரலா இவை சிற்றரத்தையின் பெயர்கள். (138)

## அமுக்கிராக்கிழங்கின் பெயர்.

கஞ்சுகா துரகீ பல்யா கழறிய வாராஹ கர்ணீ
எஞ்சலி லச்வ கந்தா எழில்வாஜி கரீயு மாகும்
தஞ்சமாம் வாஜி கந்தா தழுவச்வா வரோஹ கப்பேர்
மிஞ்சிடு மமுக்கி ராவின் கிழங்கென விளம்பு வாரே.

(இ—ள்.) கஞ்சுகா, துரகீ, பல்யா, வராஹகர்ணீ, அச்வகந்தா, வாஜிகரீ, வர்ஜிகந்தா, அச்வாவரோஹக: இவை அமுக்கிராக் கிழங்கின் பெயர்கள். (139)

**வெள்ளைச்சாரணையின் பெயர்.**

விசாகமே கடில்ல கந்தான் விருச்சீரந் தீர்க்க பத்ரம்
திசாவுறு புனர்ன வாவும் திகழ்சசி வாடி காவும்
விசாலமாம் க்ஷுத்ர வர்ஷா பூவொடு விரைக டில்லம்
உசாவுமிந் நாமம் வெள்ளைச் சாரணை யுணர்த்து மென்ப.

(இ—ள்.) விசாக:, கடில்லக:, வ்ருச்சீர:, தீர்க்கபத்ர:, புநர்நவா, சசிவாடிகா, க்ஷுத்ரவர்ஷாபூ, கடில்ல: இவை வெள்ளைச்சாரணையின் பெயர்கள். (140)

**மூக்கிரட்டை, நீலச்சாரணையின் பெயர்.**

மண்டல பத்ர கம்மும் வர்ஷாபூ க்ரூர மற்றை
மிண்டிய வர்ஷ கேது விளங்குமூக் கிரட்டை யின்பேர்
கொண்டநீ லவர்ஷா பூவும் கொண்ணீலச் யாம க்ருஷ்ண
மண்டிய புனர்ந வர்வும் மருநீலச் சார ணைக்காம்.

(இ—ள்.) மண்டலபத்ரக:, வர்ஷாபூ, க்ரூர:, வர்ஷகேது: இவை மூக்கிரட்டையின் பெயர்கள். நீலவர்ஷாபூ, நீலபுநர்நவா, ச்யாமபுநர்நவா, க்ருஷ்ணபுநர்நவா இவை நீலச்சாரணையின் பெயர்கள். (141)

**மருதாணி, செங்குறிஞ்சி, மஞ்சட்குறிஞ்சி இவைகளின் பெயர்.**

சகசரம் ஸைரே யந்தான் ஸஹாசரத் தோடு மற்றைத்
தகுஸைரே யகமு மல்கும் தழைமரு தோன்றி யின்பேர்
நகமுறுங் குரவ கப்பேர் நாறுசெங் குறிஞ்சிக் காகும்
சகமுறு குரண்ட கம்மஞ் சட்குறிஞ் சிக்கே சாற்றும்.

(இ—ள்.) ஸஹசர:, ஸைரேய:, ஸஹாசர:, ஸைரேயக: இவை மருதாணியின் பெயர்கள். குரவக: என்பது செங்குறிஞ்சியையும்; குரண்டக: என்பது மஞ்சட் குறிஞ்சியையும் குறிக்கும் (142)

### சிற்றுமுட்டியின் பெயர்.

சமங்காவோ தனிகா பத்ரௌ தனீவாடீ பலாவு மாகும
கமங்கா யஷ்டி காவும் கழறிடு மஹாஸ மங்கா
இமங்குவி சீத பாகீ யெழிலோத னஹ்வா யாவும்
அமைவுறுஞ் சிற்று முட்டி யபிதான மென்ப மேலோர்.

(இ—ள்.) ஸமங்கா, ஓதநிகா, பத்ரௌதநீ, வாடீ, பலா, காயஷ்டிகா, மஹாஸமங்கா, சீதபாகீ, ஓதநாஹ்வா இவை சிற்றுமுட்டியின் பெயர்கள். (143)

### பேராமுட்டியின் பெயர்.

மகாபலா வர்ஷ புஷ்பீ வாட்யாய னீயு மற்றை
உகாவளர் ப்ருஹத்ப லாவு முயர்தேவ ஸஹாவே தானும்
விகாசமார் ஸஹதே வாவும் விளங்கிடும் பீத புஷ்பீ
விகாதமில் பேரா முட்டி விரும்பிய நாம மாகும்.

(இ—ள்.) மஹாபலா, வர்ஷபுஷ்பீ, வாட்யாயநீ, ப்ருஹத்பலா, தேவஸஹா, ஸஹதேவா, பீதபுஷ்பீ இவை பேராமுட்டியின் பெயர்கள். (144)

### நாகபலாவின் பெயர்.

காகந்தி னிகாவே ஹ்ருஸ்வ கவேதுகா விச்வ தேவா
விரவுகாங் கேரு கீயும் விளங்குறு மரிஷ்டா மற்றைப்
பரவுகண் டாவி னேடும் பகர்நாக பலாவு மெல்லாம்
விரகறி நூலோர் கூறும் வியனாக பலாவின் பேரே.

(இ—ள்.) காகந்திநிகா, ஹ்ருஸ்வகவேதுகா, விச்வ தேவா, காங்கேருகீ, அரிஷ்டா, கண்டா, நாகபலா இவை நாகபலாவின் பெயர்கள். (145)

## அதிபலாவின் பெயர்

அதிபலா வாட்ய புஷ்பீ யவிர்கங்க தாவி ருஷ்யா
மதியுறு வ்ருஷ்ய கந்தா மகிழ்பூரி பலாவு மற்றைத்
துதிபெறு பலிகா தானுந் துலங்குநல் லதிப லாப்பேர் [காம்
அதிபலாச் சிறுதுத் திக்காம் அணிநாகம் பெருந்துத் திக்

(இ—ள்.) அதிபலா, வாட்யபுஷ்பீ, கங்கதா, வ்ருஷ்யா, வ்ருஷ்யகந்தா, பூரிபலா, பலிகா இவை அதிபலாவின் பெயர்கள். அதிபலா வென்பது சிறுதுத்தியும், நாகபலா வென்பது பெருந்துத்தியுமாம். (146)

## முதியார்கூந்தலின் பெயர்.

ஸரணீயே ஸாரணீயும் சாருபர் ணீயும் பின்னும்
அரணமார் பத்ர பர்ணீ யணிஸுப்ர ஸராவு மற்றை
மூரணுறும் ப்ரஸார ணீயே முகிழ்ராஜ பலாவுந் தானும்
சாணுறு ப்ரதானி காவும் சாற்றிடு முதியார் கூந்தல்.

(இ—ள்.) ஸரணீ, ஸாரணீ, சாருபர்ணீ, பத்ரபர்ணீ, ஸுப்ரஸரா, ப்ரஸாரணீ, ராஜபலா, ப்ரதாநிகா இவை முதியார் கூந்தலின் பெயர்கள். (147)

## தண்ணீர்விட்டான் கிழங்கின் பெயர்.

இந்தீவரீ பீவ ரீயு மியம்புநல் ருஷ்யப் ரோக்தா
சந்தமார் சதாவ ரீயும் சதபதீ த்வீபி காவும்
உந்துநீர் த்வீபி சத்ரு வூர்த்வகண் டகாவு மற்றை
முந்திய வரீயுந் தண்ணீர் விட்டான்றன் கிழங்கென் றோதும்.

(இ—ள்.) இந்தீவரீ, பீவரீ, ருஷ்யப்ரோக்தா, சதாவரீ, சதபதீ, த்வீபிகா, த்வீபிசத்ரு:, ஊர்த்வகண்டகா, வரீ இவைதண்ணீர் விட்டான் கிழங்கின் பெயர்கள். (148)

### பெருந் தண்ணீர்விட்டான் கிழங்கின் பெயர்.

இரங்கிணீ சதாவ ரீயு மியலூர்த்வ கண்டி காவும்
உரங்கிளர் சகஸ்ர வீர்யா உறுபகு பத்ரி காவும்
தாங்கமார் பீரு தானுந் தருமஹா புருஷ தந்தா [ன்ப.
பெருந்தண்ணீர் விட்டான் கந்தம் பிறங்கிடும் பெயரா மெ

(இ—ள்.) ரங்கிணீ, சதாவரீ, ஊர்த்வகண்டிகா, ஸஹஸ்ரவீர்யா, பகுபத்ரிகா, பீரு, மஹாபுருஷதந்தா இவைபெருந்தண்ணீர் விட்டான் கிழங்கின் பெயர்கள். (149)

### ஆமணக்கின் பெயர்.

சித்திரந் தருணஞ் சுக்லம் தீர்க்கதண் டமுமே ரண்டம்
தத்துறு வர்த்த மானம் தழுவுமா மண்டம் மற்றைக்
கொத்துபஞ் சாங்கு லப்பேர் குலவுகந் தர்வ ஹஸ்தம்
சித்திர நூலோர் கூறுஞ் திகழ்சிற்று மணக்கின் பேரே.

(இ—ள்.) சித்ர:, தருண:, சுக்ல:, தீர்க்கதண்ட:, ஏரண்ட:, வர்த்தமாந:, ஆமண்ட:, பஞ்சாங்குல:, கந்தர்வஹஸ்த: இவை சிற்றுமணக்கின் பெயர்கள். (150)

### ரக்தஏரண்டத்தின் பெயர்.

சஞ்சுக மஸ்தி கர்ணந் தரும்வ்யாக்ர தளமுங காட்டும்
துஞ்சிலர் ருபுகம் வ்யாக்ரம் சொல்ருபு ஹஸ்தி கர்ணீ
விஞ்சுமுத் தான பத்ர கத்தொடு விளங்கு நாமம்
எஞ்சலில் நூலே ரக்த வேரண்ட மென்றே சாற்றும்.

(இ—ள்.) சஞ்சுக:, ஹஸ்திகர்ண:, வ்யாக்ரதள:, ருபுக:, வ்யாக்ர: ருபு:, ஹஸ்திகர்ணீ, உத்தாநபத்ரக: இவை சிவப்பு ஆமணக்கின் பெயர்கள். (151)

### பேராமணக்கு, மறிகுடரி இவைகளின் பெயர்.

தூலவே ரண்டத் தோடு துன்மஹே ரண்டந் தானும்
ஏனுறு மஹாபஞ் சாங்கு லம்பேரா மணக்கென் றேற்கும்
கோலுமே ஷாந்தி ரீபஸ்த் தாந்திரீ வ்ருஷமே தாவும்
மால்சாக லாந்தி ரீகா மறிகுட ரிக்கே யாகும்.

(இ—ள்.) ஸ்தூலஏரண்ட:, மஹேரண்ட:, மஹாபஞ்சாங்குல: இவைபேராமணக்கின் பெயர்கள்; மேஷாந்த்ரீ, பஸ்தாந்த்ரீ, வ்ருஷமேதா, சாகலாந்த்ரீ இவை மறிகுடரியின் பெயர்கள். (152)

முதல் வர்க்கம்,
முற்றிற்று.

# இரண்டாவது வர்க்கம்.

---

### சததப்பையின் பெயர்.

சதபுஷ்பா மிசியே கோஷா சதாஹ்வாவே காரவீயும்
இதமுறு மதிச்சத் ராவு மியலவாக் புஷ்பீ தானும்
அதமறும் பீதி காவும் அளவில்மா தவிசி பாவும்
விதமுறு சதகுப் பைக்கே விளம்பிய பெயரா கும்மே.

(இ—ள்.) சதபுஷ்பா, மிசி:, கோஷா, சதாஹ்வா, காரவீ, அதிச்சத்ரா, அவாக்புஷ்பீ, பீதிகா, மாதவீ, சிபா இவை சதகுப்பையின் பெயர்கள். (1)

### காட்டுச்சததப்பையின் பெயர்.

மிசிரேயா தால பர்ணீ மிசியொடு தால பத்ரீ
ஒசிவரு சாலே யந்தான் உயர்சீத சிவமு மற்றைக்
கசிவுறு ரக்த தோஷம் கழித்திடு சாலீ னம்மே
குசமுறு காடு சார்ந்த குறிசத குப்பையின்பேர்.

(இ—ள்.) மிச்ரேயா, தாலபர்ணீ, மிசி:, தாலபத்ரீ, சாலேயா, சீதசிவ:, சாலீந: இவை காட்டுச் சதகுப்பையின் பெயர்கள். (2)

### வசம்பு, வெள்வசம்பு இவைகளின் பெயர்.

உக்கிர ஜடிலா வோடு முயர்வசா லோம சாவும்
உக்கிர கந்தா கோலோ மீயிவை வசம்பென் றோதும்
தக்கஷட் க்ரந்தா ச்வேத வசாவொடு சாற்று மேத்யா
மிக்கஹை மவதீ தானு விளங்குவெள் வசம்பின் பேராம்.

(இ—ள்.) உக்ரஜடிலா, வசா, லோமசா, உக்ரகந்தா, கோலோமீ இவைவசம்பின் பெயர்கள்; ஷட்க்ரந்தா, ச்வேதவசா, மேத்யா, ஹைமவதீ இவை வெள்வசம்பின்பெயர்கள். (3)

**கோட்டைக்கரந்தை, காக்கைக் கோல்லி இவைகளின் பெயர்.**

விச்சிர கந்தா விச்ரா விரியதி கந்தி காவும்
துச்சமில் விபுஷா வோடு துலங்கிய ஹபுஷா வென்ப
மெச்சுகொட் டைக்க ரந்தை விரித்வாங்க்ஷ நாசி னீயும்
கச்சுக்னீ யச்சு வத்த பலாவிவை கர்க்கைக் கொல்லீ.

(இ—ள்.) விச்ரகந்தா, விச்ரா, அதிகந்திகா, விபுஷா, ஹபுஷா இவை கொட்டைக்கரந்தையின் பெயர்கள். த்வாங்க்ஷநாசிநீ, கச்சுக்நீ, அச்வத்தபலா இவை காக்கைக் கொல்லியின் பெயர்கள் (4)

**வாய்விடங்கத்தின் பெயர்.**

விடங்கமே ஜந்து ஹந்த்ரீ விளங்குதண் டுலீபு மற்றை
அடங்கலில் கைர லாவும் மோஹாவும் கிருமி ஹாவும்
நுடங்குசித் ரதண்டு லாவும் நுவல்ம்ருக காமி னீயும்
உடங்கிய கிருமிக் னீயு முயரும்வாய் விடங்கத் தின்பேர்.

(இ—ள்.) விடங்க:, ஜந்து ஹந்த்ரீ, தண்டுலீ, கைரலா, அமோஹா, க்ருமிஹா, சித்ரதண்டுலா, ம்ருககாமிநீ, க்ருமிக்நீ இவைவாய்விடங்கத்தின் பெயர்கள். (5)

**வெட்பாலையின் பெயர்.**

குடஜம்வத் ஸகமே கௌடம் குளிர்கிரி மல்லி காவும்
தடமுறு கௌட ஜம்நற் றளிரிந்த்ர வ்ருக்ஷம் மற்றைத்
தொடர்மல்லி காபுஷ் பம்மே சொல்லிய வ்ருக்ஷ கந்தான்
அடரிலைக் கலிங்க மென்று மறைந்திடும் வெட்பா லைப்பேர்

(இ—ள்.) குடஜ:, வத்ஸக:, கௌட:, கிரிமல்லிகா, கௌடஜ:, இந்த்ரவ்ருக்ஷக:, மல்லிகாபுஷ்ப:, வ்ருக்ஷக:, கலிங்க: இவை வெட்பாலையின் பெயர்கள். (6)

### வெட்பாலையரிசியின் பெயர்.

கலிங்ககா சக்கி ராஹ்வா கஹ்வரம் வல்ல ஜந்தான்
துலங்குபத் ரயவா வோடு சொல்க்ருஷ்ண தண்டு லாவும்
இலங்குவத் ஸகபீ ஜம்மே எழிலிந்த்ர யவமும் பின்னும்
நலங்கிளர் வெட்பா லைக்கே நவின்றிடு மரிசி யின்பேர்.

(இ—ள்.) கலிங்ககா:, சக்ராஹ்வா, கஹ்வரம், வல்லஜம், பத்ரயவா, க்ருஷ்ணதண்டுலா, வத்ஸகபீஜ:, இந்த்ரயவா இவை வெட்பாலையரிசியின் பெயர்கள். (7)

### யவக்ஷாரத்தின் பெயர்.

யவக்ஷாரம் யவஜம் யவ்யம் யவசூகம் யவாஹ்வம் யாவும்
உவட்டாத பாக்கி யத்தோ டுயர்யாவ சூக ஜப்பேர்
கவட்டுறு யவாக்ர ஜந்தான் கருதுசூ கஜமும் மற்றைச்
சவட்டலில் யவக்ஷா ரத்தின் தழுவிய நாம மாமே.

(இ—ள்.) யவக்ஷார:, யவஜ:, யவ்ய:, யவசூக:, யவாஹ்வா, பாக்ய:, யாவசூகஜ:, யவாக்ரஜ:, சூகஜ: இவை யவக்ஷாரத்தின் பெயர்கள். (8)

### சர்ஜிக்ஷாரத்தின் பெயர்.

சுகவர்ச்சம் சுவர்ச்சத் தோடு சுவர்ச்சிகம் ஸர்ஜி காவே
தகுஸர்ஜி காக்ஷா ரம்மும் தாவிலாச் சுவர்ச்சி காவும்
மிகுபுகழ் ஸர்ஜி க்ஷாரம் மேவிய நாம மென்று
வெகுகலை கற்று ணர்ந்தோர் வேண்டுவர் பாரின் மீதே.

(இ—ள்.) ஸ்ஜகவர்ச்ச:, ஸுவர்ச்ச:, ஸுவர்ச்சிக:, ஸர்ஜிகா, ஸர்ஜிகாக்ஷார:, ஸுவர்ச்சிகா இவை ஸர்ஜிக்ஷா ரத்தின் பெயர்கள். (9).

### வெங்காரத்தின் பெயர்.

டங்கணம் லோக சுத்தி காரகம் த்ராவி யோடு
டங்கண க்ஷார மற்றைத் தகுதிரா வணக மாகும்
பொங்குமா லதிர ஸத்தின் சம்பவ மென்றும் போற்றும்
இங்கிவை வெங்கா ரத்துக் கேற்றிடு நாம மாமே.

(இ—ள்.) டங்கண:, லோஹசுத்திகாரக:, த்ராவீ, டங்கணக்ஷார:, த்ராவணக:, மாலதீரஸஸம்பவ: இவைவெங்கா ரத்தின் பெயர்கள். (10)

### இந்துப்பின் பெயர்.

சிந்துஜம் சிவமே சிந்து சிந்தூத்தம் மணிமந் தம்மே
முந்துசி லாத்ம கம்பின் முயங்குநா தேய மற்றைச்
சிந்துவில் சுத்தம் சீத சிவத்தோடு சைந்த வந்தான்
நந்தலி லிந்துப் பிற்கே நவின்றநன் ஞம மாகும்.

(இ—ள்.) ஸிந்துஜம், சிவம், ஸிந்து, ஸிந்தூத்தம், மணிமந்தம், சிலாத்மகம், நாதேயம், சுத்தம், சீதசிவம், ஸைந்தவம் இவை இந்துப்பின் பெயர்கள். (11)

### வளையலுப்பின் பெயர்.

பிடந்திரா வணம்க்ஷா ரம்மே பெருகுக்ருத் ரிமக மென்ப
மடங்கிய தூர்த்தங் கண்ட லவணமா சரமு மற்றைத் [வும்
தொடர்ந்திடுஞ் சுபாக்கி யம்பின் தொடுக்ருத கம்மும் யா
இடந்தரு நூலோர் கூறும் எழில்வளை யலுப்பின் பேரே.

(இ—ள்.) பிடம், த்ரர்வணம், க்ஷார்ரம், க்ருத்ரிமகம், தூர்த்தம், கண்டலவணம், ஆஸுரம், ஸுபாக்யம், க்ருதகம் இவை வளையலுப்பின் பெயர்கள். (12)

### கரியுப்பின் பேயர்.

திலகம்சௌ வர்ச்ச லந்தான் திகழ்கால லவணம் பின்னும்
உலவிய ருசகம் ஹ்ருத்ய கந்தக முணர்த்து மக்ஷம்
நிலவுக்ருஷ் ணலவ ணம்மும் நிகழுமிந் நாமம் யாவும்
குலவிய கரியுப் பிற்கே கூறுவர் தேறு நூலோர்.

(இ—ள்.) திலகம், ஸௌவர்ச்சலம், காலலவணம், ருசகம், ஹ்ருத்யகந்தகம், அக்ஷம், க்ருஷ்ணலவணம்இவை கரியுப்பின் பெயர்கள். (13)

### சவுட்டுப்பின் பேயர்.

ரோமகம் வஸுக மௌர்வம் ருசியுறு முக்ர மாகும்
தோமறு மௌத்பி தம்பாம் சுலவண மென்று மோதும்
வாமஞ்சார் வகுணம் பின்னும் வசுவென வழுத்தும் யாவும்
சேமமார் சவுட்டுப் பிற்கே செப்பிடும் நாம மாமே.

(இ—ள்.) ரோமகம் வஸுகம், ஔர்வம், உக்ரம், ஔத்பிதம், பாம்சுலவணம், ஸார்வகுணம், வஸு இவை சவுட்டுப்பின் பெயர்கள். (14)

### சமுத்திரவுப்பின் பேயர்.

சிசிரமே ஸமுத்ர ஜந்தான் திகழ்ஸாக ரஜமும் பின்னும்
பகர்*லவ ணோத தீஸம் பவம் க்ஷாரந் தானு மென்ப
நிகழ்சமுத் ரலவ ணம்மே நிறைகட லுப்பின் பேராம்
இகழ்விலிந் நாம மன்றி யிபம்பிடும் பேத மின்னும்.

*லவணோததீ—நீட்டல்.

(இ—ள்.) சிசிரம், ஸமுத்ரஜம், ஸாகரஜம், லவணோத திஸம்பவம், க்ஷாரம், ஸமுத்ரலவணம் இவை கடலுப்பின் பெயர்கள். (15)

லவணபேதம்.

வஜ்ரகம் ஸர்வ க்ஷாரம் வளர்லவ ணாக ரம்மும்
மெச்சிய நீலி காசோத் பவங்காடம் ஔஷ்க ரம்மாம்
துச்சமில் திரௌணே யந்தான் சொல்லுமிந் நாமமெல்லாம்
வச்சிடு லவண பேத வகைராஜ நிகண்டிற் கூறும்.

(இ—ள்.) வஜ்ரகம், ஸர்வக்ஷாரம், லவணாகரம், நீலி காசோத்பவம், காடம், ஔஷ்கரம், த்ரௌணேயம் முதலிய பல உப்புவர்க்கங்களை ராஜ நிகண்டு கூறும். (16)

பெருங் காயத்தின் பெயர்

ஹிங்குரா மடமத் யுக்ர மிருஞ்சூப தூப னந்தான்
பொங்குஜந் துக்ன மோடு பூதநா சனமு மாகும்
மங்கிடா பாஹ்லி கீக மருவிய வகூட கந்தம்
துங்கமார் ஜரணந் தானுஞ் சொல்பெருங் காயத்தின் பேர்.

(இ—ள்,) ஹிங்கு, ராமடம், அத்யுக்ரம், ஸூபதூப நம், ஜந்துக்நம் பூதநாசநம், பாஹ்லீகம், அகூடகந்தம், ஜரணம் இவை பெருங்காயத்தின் பெயர்கள். (17)

ஹிங்குபத்திரியின் பெயர்.

காருபத் திரிகா தன்வி சாற்றிடு பாஷ்பி காவும்
நேரும்பில் விகாவே ஹிங்கு பத்திரீ கபரீ யாகும்
தீர்வில்ப்ருத் வீகா வோடு தீர்க்கிகா பிருது லாவும்
சேருநற் ப்ருதுவு மின்ன திகழிங்கு பத்தி ரிப்பேர்.

(இ—ள்.) தார்ருபத்ரிகா, தந்வீ, பார்ஷ்பிகா, பில்விகா, ஹிங்குபத்ரீ, கபரீ, ப்ருத்வீகா, தீர்க்கிகா, ப்ருதுலா, ப்ருது இவை ஹிங்கு பத்திரியின் பெயர்கள். (18)

### பால் பெருங்காயத்தின் பெயர்.

வேணுபத்ரீப லாசா விளங்குபிண் டஹிங்கு வாகும்
சேர்ணவில் வம்ச பத்ரீ குலவிய ஜந்து காவும்
மாணுறு நாட ஹிங்கு மருவுநற் சிவாடி காவும்
பேணிய நாட ஹிங்கு பெறும்பெயர் பால்கா யப்பேர்.

(இ—ள்.) வேணுபத்ரீ, பலாசா, பிண்டஹிங்கு, வம்சபத்ரீ, ஜந்துகா, நாடஹிங்கு, சிவாடிகா இவை பால்காயத்தின் பெயர்கள். (19)

### தும்புருவின் பெயர்.

தும்புரு ஸெளர பந்தான் த்விஜமே தீக்ஷ்ண வல்கம்
வம்புறு தீக்ஷ்ண பத்ரம் வருதீக்ஷ்ண பலமும் ஸெளரம்
நம்புநல் லனுஜம் மற்றும் நவில்மஹா முனியு நாட்டும்
இம்பரில் நல்லோ ரேத்தும் இகழ்வில்தும் புருவின் பேராம்.

(இ—ள்.) தும்புரு:, ஸெளரப:, த்விஜ:, தீக்ஷ்ணவல்க:, தீக்ஷ்ணபத்ர:, தீக்ஷ்ணபல:, ஸெளர:, அநுஜ:, மஹாமுநி: இவை தும்புருவின் பெயர்கள். (20)

### சிற்றேலத்தின் பெயர்.

சந்திர பாலா வேலா தருதுத்தா கபோத வர்ணு
சுந்தரத் ராவி டீயுஞ் சூக்ஷ்மமாந் த்ருடியு மற்றை
அந்தமார் கோரங் கீயு மரும்பகு லாவி ளேடும்
பிந்திய நிஷ்கு டீயும் பிறங்குசிற் றேலத் தின்பேர்.

(இ—ள்.) சந்த்ரபாலா, ஏலா, துத்தா, கபோதவர்ணு, த்ராவிட, த்ருடி:, கோரங்கி, பஹுலா, நிஷ்குடீ இவை சிற்றேலத்தின் பெயர்கள். (21)

### பேரேலத்தின் பெயர்.

திரிபுடா ஸ்தூலை லாவும் திரிபுடோத் பவாபு டாவும்
மருவுத்வக் ஸுகந்தா வோடு வளர்ப்ருஹ தேலா வாகும்
பொருவில்ப்ருத் வீகா பத்ரை லாவொடு கன்ய காவும்
குரவர்கள் மகிழ்ந்து நாளும் கூறுபே ரேலத் தின்பேர்.

(இ—ள்.) த்ரிபுடா, ஸ்தூலைலா, த்ரிபுடோத்பவா, புடா, த்வக்ஸுகந்தா, ப்ருஹதேலா, ப்ருத்வீகா, பத்ரைலா, கன்யகா இவை பேரேலத்தின் பெயர்கள். (22)

### சிறுநாகப்பூவின் பெயர்.

நாகமே நாக புஷ்பம் நாககே சரம் சாம்பேயம்
நாககிஞ் சல்கம் ஹேமம் நாறுகாஞ் சனமு மற்றைச்
சோகமில் கனகம் பின்னும் சொல்லுகே சரமு மென்ப
வேகமார் சிறுநா கப்பூ விளங்கிடு நாம மாமே.

(இ—ள்.) நாகம், நாகபுஷ்பம், நாககேஸரம், சாம்பேயம், நாககிஞ்ஜல்கம், ஹேமம், காஞ்சநம், கநகம், கேஸரம் இவை சிறுநாகப்பூவின் பெயர்கள். (23)

### லவங்கப்பட்டையின் பெயர்.

இவசமே வராங்கம் ப்ருங்கம் த்வக்சோசம் சகலம் தானும்
கவசமார் சைஹலந்தான் கருதிய லாட பர்ணம்
தவமுறு முகசோத் யம்மே தழுவுமுத் கடமும் மற்றைக்
கவர்வனப் பிரியந் தானும் கழறிடும் லவங் கப் பட்டை.

(இ—ள்.) த்வசம், வரர்ங்கம், ப்ருங்கம், த்வக்சோசம், சகலம், ஸைஹலம், லாடபர்ணம், முகசோத்யம், உத்கடம், வநப்ரியம் இவை லவங்கப்பட்டையின் பெயர்கள்.

### தமாலபத்திரத்தின் பெயர்.

வாசங்கோ பனமி ராமம் வஸ்திரம் தமால பத்ரம்
நேசமார் பலர்சம் பத்ரம் நிகழுந் தா பஸஜ மற்றை
வீசுறு சதன மம்சு கந்தளம் விளம்பு நாமம்
ஏசறு தமால பத்ர மென்பபச் சிலையு மப்பேர்.

(இ—ள்.) வாஸ:, கோபநம் ராமம், வஸ்த்ரம், தமால பத்ரம், பலர்சம், பத்ரம், தாபஸஜம், சதநம், அம்சுகம், தளம் இவை பச்சிலையின் பெயர்கள். (25)

### தாளீசபத்திரியின் பெயர்.

நீலமா மலகீ பத்ரம் நிகழ்ஸ ோதா தாந்தர் ளீசம்
மேலுறு பத்தி ராட்யம் விளங்குதா ளீச கந்தான்
ஏலுந்தர் ளீச பத்ர கத்தொடு மியலு நாமம்
நூலவர் மகிழ்ந்து நாளும் நுவல்தாளீ சபத்திரி யாகும்.

(இ—ள்.) நீலம், ஆமலகீபத்ரம், ஸ ோகோதரம், தாளீஸம், புத்ராட்யம், தாளீஸகம், தாளீஸபத்ரகம் இவை தாளீசபத்திரியின் பெயர்கள். (26)

### மூங்கிலுப்பின் பெயர்.

துங்கக்ஷீ ரிதுகா சுப்ரா த்வக்க்ஷீரி வம்ச ஜாவும்
பொங்குநல் வம்ச க்ஷீரி ய்வஸம்ப வாவும் பின்னும்
துங்கமார் வாம்சி வம்ச்யா சுபாவம்ச ரோச னவும்
தங்கிய யவஜா வைண வீவேயுப் பென்றே சாற்றும்.

(இ—ள்.) துங்கக்ஷீரீ, துகா, சுப்ரா, த்வக்க்ஷீரீ, வம்சஜா, வம்சக்ஷீரீ, யவஸம்பவா, வாம்சீ, வம்ச்யா, சுபா, வம்சரோசநா, யவஜா, வைணவீ இவை மூங்கிலுப்பின் பெயர்கள். (27)

### பெருஞ்சீரகத்தின் பெயர்.

உபகுஞ்சா கா்லி காவும் உபகாலி காவே குஞ்சீ
உபகுஞ்சீ ப்ருத்வீ காவும் உயரிய சுஷவீ தானும்
தபமறு குஞ்சி காவே தகும்ஸ்தூல ஜீர கம்மும்
நிபமறும் பெரிய சீர கத்தினை நிகழ்த்து நாமம்.

(இ—ள்.) உபகுஞ்சா, கா்லிகா, உபகாலிகா, குஞ்சீ, உபகுஞ்சீ, ப்ருத்வீகா, ஸுஷவீ, குஞ்சிகா, ஸ்தூலஜீரக: இவை பெருஞ்சீரகத்தின் பெயர்கள். (28)

### மாதுளம்பழத்தின் பெயர்.

தாடிமங் கரகத் தோடு தாடிமீ சார மாகும்
தேடிய ரக்த பீஜம் திகழ்சுக வல்ல பந்தான்
கோடுறு குட்டி மம்பின் குறிபல சாட வப்பேர்
பீடுறு குசப லம்மும் பெருகுமா் துளையின் பேரே.

(இ—ள்.) தாடிம:, கரக:, தாடிமீஸார:, ரக்தபீஜ:, சுகவல்லப:, குட்டிம:, பலசாடவ:, குசபல: இவை மாதுளம் பழத்தின் பெயர்கள். (29)

### கோத்துமல்லியின் பெயர்.

தான்யகம் சால்ல காவும் தானேயம் விதுன்ன கந்தான்
தான்யகா் சத்ர தான்யம் தனிகுஸ்தும் புருவு மாகும்
தான்யாவே தா்னீ யோடு தக்கவிப் பெயர்கள் யாவும்
ஊனமில் கொத்து மல்லி யுறுபெய ராகு மென்ப.

(இ—ள்.) தாந்யகம், சால்லகா, தாநேயம், விதுந் நகம், தாந்யகா, சத்ரதாந்யம், குஸ்தும்புரு:, தாந்யா, தாநீ இவ்வை கொத்து மல்லியின் பெயர்கள். (30)

**சீரகத்தின் பெயர்.**

சீரகந் தீர்க்க கந்தான் தீப்பியம் வருணம் மற்றை
நேருறு ஹ்ருத்யம் பூஜ்ய மானகம் நிகழும் ருச்யம்
தீர்வுறு பீதா பம்மே சேருமா கதம ஜாஜீ
ஏருறு மனோஜ்ஞந் தானும் எழில்சீர கத்தின் பேராம்.

(இ—ள்.) ஜீரகம், தீர்க்ககம், தீப்யம் வருணம், ஹ்ருத்யம், பூஜ்யமாநகம், ருச்யம், பீதாபம், மாகதம், அஜாஜீ, மநோஜ்ஞும் இவை சீரகத்தின் பெயர்கள். (31)

**வெண்சீரகத்தின் பெயர்.**

சுக்கில வஜாஜி யோடு சொல்லுதீர்க் ககணு வாகும்
தக்கதீர்க் ககங்க ணுவே சாற்றுதீர்க் கசீர கம்மும்
மிக்கவெள ரஜீர கந்தீ பனமுறு ஸ்தன்யந் தானும்
இக்கண ஜீர கத்தோ டேத்துவெண் சீர கப்பேர்.

(இ—ள்.) சுக்லஅஜாஜீ, தீர்க்ககணு, தீர்க்கக:, கணு, தீர்க்கஜீரகம், கௌரஜீரகம், ஸ்தந்ய:, கணஜீரக: இவை வெண்சீரகத்தின் பெயர்கள். (32)

**கருஞ்சீரகத்தின் பெயர்.**

சுகந்தம்வர் ஷாவி ணேடு சொல்லிய ஜாணு காலி
முகந்தகாச் மீர ஜீர காகண ஜீர கந்தான்
உகந்தநல் க்ருஷ்ணு ஜாஜீ யுரைகால பேசி காவும்
இகந்தொழி யாது கொள்ளு மியல்கருஞ் சீர கப்பேர்.

(இ—ள்.) ஸுகந்த:, வர்ஷா, ஜரணு, காவி:, காச்மீர ஜீரகா, கணஜீரக:, க்ருஷ்ணஜாஜீ, காலபேசிகா இவை கருஞ்சீரகத்தின் பெயர்கள். (33)

## காட்டுச்சீரகத்தின் பெயர்.

அருமையர்க் கணுவி ேனாடு மணிப்ருஹத் பர்லி தானும்
திருவமார் சூக்ஷ்ம பத்ரா சொல்வன ஜீர கந்தான்
கருமேகஞ் சொறிசி ரங்கு கழித்து நற் குணமேகாட்டும்
பெருமைசேர் காட்டுச் சீர கத்தாறு பெயர்க டாமே.

(இ—ள்.) கணு, ப்ருஹத்பர்லீ சூக்ஷ்மபத்ரா, வந ஜீரகம் இவை காட்டுச் சீரகத்தின் பெயர்கள். (34)

## அரிசித்திப்பிலியின் பெயர்.

பிப்பலீ மாக தியும் பிறங்குதீக்ஷ்ண தண்டு லாவும்
ஒப்பிலா வூஷ ணவு முபகுல்யா கோலாச் யாமா
செப்புநற் கணகி ருஷ்ண சேர்சப லாசௌ வுண்டீ
திப்பிலி முன்னே சேருந் திகழரி சிப்பே ராமே.

(இ—ள்.) பிப்பலீ, மாகதீ, தீக்ஷ்ணதண்டுலா, ஊஷணு உபகுல்யா, கோலா, ச்யாமா, கணு, க்ருஷ்ணு, சபலா, சௌண்டீ இவை அரிசித்திப்பிலியின் பெயர்கள் (35)

## திப்பிலிமூலத்தின் பெயர்.

மூலங்க்ரந் திகமே கோல மூலம்பிப் பலீமூ லம்மே
ஏ லுறுங் கடுகி ரந்தி யெழில்சவி காசி ரந்தான்
கோ லுமூ ஷணமும் சவ்வ க்ரந்திக மென்றுங் கொள்ளும்
சா லுந்திப் பிலிமூ லத்தின் சாற்றுநற் பெயர்க டாமே.

(இ—ள்.) மூலம், க்ரந்திகம், கோலமூலம், பிப்பலீ மூலம், கடுக்ரந்தி, சவிகாசிரம், ஊஷணம், ஸர்வக்ரந்திகம் இவை திப்பிலி மூலத்தின் பெயர்கள் (36)

### திப்பிலிமூலத்தின் பெயர், செவியத்தின் பெயர்.

விண்டமுற் பெயர்க ளன்றி விளங்குநல் மோடி யென்றும்
கண்டதிப் பிலிதா னென்றும் கழறுவ ரதற்கே நாமம்
கொண்டநற் சவிகா சவ்யம் கோலவல் லீயி னோடும்
மண்டிய சவிகந் தானும் வருசெவி யத்தின் பேராம்.

(இ—ள்.) திப்பிலிமூலத்திற்கு முற்கூறிய பெயர்க ளன்றி மோடியென்றும், கண்டதிப்பிலி என்றும் கூறுவர்; சவிகா, சவ்யம், கோலவல்லீ, சவிகம் இவை செவியத்தின் பெயர்கள். (37)

### ஆனைத்திப்பிலியின் பெயர்.

கரிகணா விபக ணாவும் கஜக்ருஷ்ணா ச்ரேய ஸீயும்
எரிகஜ பிப்ப லீயே யியல்த்வீப பிப்ப லீயும்
திரிபுறும் ஸைம்ஹ லீயும் திகழ்வன பிப்ப லீயும்
நெருங்குமஸ் திமக தாவும் நோனைந் திப்ப லீயாம்.

(இ—ள்.) கரிகணா, இபகணா, கஜக்ருஷ்ணா, ஸ்ரேயஸீ, கஜபிப்பலீ, த்வீபபிப்பலீ, ஸைம்ஹலீ, வநபிப்பலீ, ஹஸ்திமகதா இவை ஆனைத்திப்பிலியின் பெயர்கள். (38)

### கொடிவேலியின் பெயர்.

சித்ரகந் தகனம் வ்யாளம் சிகீயொடு பாலீ பாடீ
ஒத்தநல் வல்ல ரீயே யுயர்வன்னி கடுவே யாகும்
தத்துபா டினம்ஜோ திஷ்கம் தாருண மக்னி கந்தான்
பத்திரக் கொடிவே லிக்கே பகருநற் பெயர்க ளாகும்.

(இ—ள்.) சித்ரக:, தஹந:, வ்யாள:, சிகீ, பாலீ, பாடீ, வல்லரீ, வந்ஹி:, கடு:, பாடிந:, ஜோதிஷ்க:, தாருண:, அக்நிக: இவை கொடிவேலியின் பெயர்கள். (39)

கருங் கொடிவேலியின் பெயர்.

கருதுக்ருஷ் ணாரு ணவும் கனன்றிடு மனலந் த்வீபி
பெரிதுயர் சித்ர பானு பிறங்குபா வகப்பேர் தானும்
விரிதிரை ஞாலந் தன்னுள் விளங்கிடு மாயு ளாலோர்
உரிகருங் கொடிவே லிக்கே யுரைத்திடும் நாம மாகும்.

(இ—ள்.) க்ருஷ்ணாருண:, அநல:, த்வீபீ, சித்ர பாநு: பாவக: இவை கருங் கொடிவேலியின் பெயர்கள். (40)

சுக்கின் பெயர்.

நாகரஞ் ச்ருங்க பேரம் நவில்விச்வௌ ஷதமே சுண்டீ
சோகைதீ ரார்த்ர கம்மும் துகளறு கடுபத் ரந்தான்
வேகமார் மஹௌஷ தம்பின் விச்வம்விச் வபேஷ ஜப்பேர்
தேகநா லுணர்ந்து கூறுந் தெரிசுக்கின் பெயர்க ளாமே.

(இ—ள்.) நாகரம், ச்ருங்கபேரம், விச்வௌஷதம், சுண்டி, ஆர்த்ரகம், கடுபத்ரம், மஹௌஷதம், விச்வம், விச்வபேஷஜம் இவை சுக்கின் பெயர்கள். (41)

இஞ்சியின் பெயர்.

மூலஜம் சார்ங்கம் குன்ம மூலமார்த் ரகம்ம ஹீஜம்
சீலமா ரபாக சாகம் ச்ருங்கபே ரமுமே சேரும்
மேலதாம் ராகுச் சத்ரம் மிகுமுனி பூஹ்வ யந்தான்
கோலுமார்த் ராக்யா வென்றுங் குலவிய வப்பேர் தானும்.

(இ—ள்) மூலஜம், சார்ங்கம், குல்மமூலம், ஆர்த்ரகம, மஹீஜம், அபாகசாகம், ச்ருங்கபேரம், ராகுச்சத்ரம், முநி பூஹ்வயம், ஆர்த்ராக்யம்; (42)

### இதுவுமது

வரத்தொடு சைக தேஷ்டம் வருமனூ பஜமு மாகும்
நிரத்துறு சச்சா கம்மும் நிகழ்ஸௌசா ககமு மப்பேர்
சிரத்துநோய் தீர்க்கு மார்த்ர சாகங்கந் தலமும் சேரும்
விருத்திசெய் யாபு ணூலோர் விரும்பிய இஞ்சி யாமே.

(இ—ள்.) வரம், சைகதேஷ்டம், அநூபஜம், சச்சாகம், ஸௌசாககம், ஆர்த்ரசாகம், கந்தலம் இவை இஞ்சியின் பெயர்கள். (43)

### மிளகின் பெயர்.

மரிசமே சிரோவி ருத்தம் மகிழ்யவ னேஷ்ட மற்றைப்
பரிசமார் க்ருஷ்ணம் ச்யாமம் பலிதங்கோ லகமு மாகும்
துரிசறும் வல்லீ ஜம்மே தூகளா றூஷணம் பின்
பரசுதர் மபத்த னம்மும் பன்னரி யமிளகின்பேரே.

(இ—ள்.) மரிசம், சிரோவ்ருத்தம், யவநேஷ்டம், க்ருஷணம், ச்யாமம், பலிதம், கோலகம, வல்லீஜம், ஊஷணம், தூர்மபத்நம் இவை மிளகின் பெயர்கள். (44)

### வெண் மிளகின் பெயர்.

சுப்பிர மரிசமும் தூகளில் சிக்ருஜம்
செப்பறு பெருமைசேர் சிக்ரு பீஜமும்
தப்பறு நூலவர் தரணியிற் சொலும்
ஒப்பறு வெண்மிள குரைக்கும் நாமமே.

(இ—ள்.) சுப்ரமரிசம், சிக்ருஜம், கிக்ருபீஜம் இவை வெண்மிளகின் பெயர்கள். (45)

### குரோசாணியோமத்தின் பெயர்.

உக்கிர கந்தா தீப்ய முயர்யவாக் ரஜமு மற்றைத்
தக்கதீ பகம்ய வானீ தழுவிய தீப னீயா
யுக்குறு யவானி கம்மும் புரியவ ஸாஹ்றவந் தானும்
இக்குரோ சாணி யோமத் தின்பெய ராகு மன்றே.

(இ—ள்.) உக்ரகந்தா, தீப்ய:, யவாக்ரஜ:, தீபக:, யவாநீ, தீபநீயா, யவாநிக:, யவஸாஹ்றவ: இவை குரோசாணியோமத்தின் பெயர்கள். (46)

### புளியின் பெயர்.

தித்திடீ கம்சா காம்லம் செறியம்ல விருக்ஷம் மற்றை
ரத்தபூ ரகம்வ்ரு க்ஷாம்லம் ரமணிய வம்ல சாகம்
மத்தமே தீர்க்கு மம்ல மஹீருக மருவும் யாவும்
உத்தமர் கூறும் நாலின் உயர்புளி யாகு மன்றே.

(இ—ள்.) தித்திடீகம், சாகாம்லம், அம்லவ்ருக்ஷ:, ர்க்தபூர்கம் வ்ருக்ஷாம்லம், அம்லசாக:, ஆம்லமஹீருஹ: இவை புளியின் பெயர்கள். (47)

### * புளிவஞ்சியின் பெயர்.

சதவேதீ வேத ஸாம்லந் தருமம்ல வேத ஸந்தான்
உத்முறு ரக்த ஸ்ராவீ யுயர்பீம ரஸாமல மாகும்
சுதமறு மம்லம் வீர வேதஸ மென்றுஞ் சொல்லும்
இதமுறு பேத கம்மும் இயம்புநற் புளிவஞ் சிப்பேர்.

---

*இதனையே கொறுக்காய்ப்புளியென்று போகர் நிகண்டு கூறும்.

(இ—ள்.) சதவேதீ, வேதஸாம்ல:, அம்லவேதஸ:, ரக்தஸ்ராவீ, பீம:,ரஸாம்ல:, அம்ல:, வீரவேதஸ:, பேதக: இவை புளிவஞ்சியின் பெயர்கள். (48)

**ஓமத்தின் பெயர்.**

லோசமர்க் கடமே வல்லீ லோபமில் கார வீயும்
பேசுதீப் யகம்மோ தாவும் பெரும்பஸ்த மோதா மற்றைத்
தேசுறு கராஹ்வா ஹஸ்தி மயூரகா தெரிக்குமின்ன
ஆசறு மஜமோ தாவு மறையுநல் லோமத் தின்பேர்.

(இ—ள்.) லோசமர்க்கட:, வல்லீ, காரவீ, தீப்யக:, மோதா, பஸ்தமோதா, கராஹ்வா, ஹஸ்திமயூரகா, அஜமோதா இவை ஓமத்தின் பெயர்கள். (49)

**தைவேளையின் பெயர்.**

பூதிம யூரி காவும் பொருந்துநற் கந்தா துங்கீ
சேதமில் கரபுஷ் பாவே திகழுஜ கந்தா தானும்
கோதறு பஸ்த கந்தா குலவுறு விகந்தி காவும்
ஓதுகா ரவியே பர்ப்ப ராவுயர் தைவே ளைப்பேர்.

(இ—ள்.) பூதிமயூரிகா, கந்தா, துங்கீ, கரபுஷ்பா, அஜகந்தா, பஸ்தகந்தா, விகந்திகா, காரவீ, பர்ப்பரா இவை தைவேளையின் பெயர்கள். (50)

**விளாம்பழத்தின் பெயர்.**

ததிபலஞ் சிரபா கீயும் ததித்தமே யக்ஷ ஸஸ்யம்
உதிதமார் கபித்தங் க்ராஹீ உயர்கந்த பலாவு மற்றை
முதிர்சுவைக் கபிப்ப்ரி யந்தான் முழங்குமிந் நாமம் யாவும்
எதிரிலா விளாம்ப ழத்தி னியம்பிடு நாம மாமே.

(இ—ள்.) ததிபல:, சிரபாகீ, ததித்த:, அக்ஷஸஸ்ய:, கபித்த:, க்ராஹீ, கந்தபல:, கபிப்ரிய: இவை விளாம்பழத்தின் பெயர்கள். (51)

